


ஆண்டு : 37 நவம்பர் 1972 இதழ்: 11




ஆசிரியர்கள் :

ஆங்கிலப் பகுதி : T. N. ராமச்சந்திரன், B.COM. B.L.
பத்திராதிபர் : திருலோகசீதாராம்
காப்பாளர் : அமுசு பெரியசாமி

ஆண்டுக் கட்டணம் ரூ. 10

அலுவலகம் : 2-A, கோட்டை ஸ்டேஷன் ரோடு, திருச்சி-2. (தொலைபேசி : 7822)

# மக்கள் கருணை யாருக்கு ?




மாதவம் சிறந்து
மானிடம் உயர்க

பாராளுமன்றத் தேர்தலையொட்டி முன்பு தமிழ்நாட்டிலும் சட்டசபைத்தேர்தலை முன்கூட்டி நடத்தி மக்களின் தீர்ப்பைப் பெற கருணாநிதி முன்வந்தபோது உறங்கிக்கொண்டிருந்த சக்திகள் விழித்துக்கொண்டன. "வசமாக மாட்டிக்கொண்டார், இப்பொழுது மக்கள் தங்கள் தவறுகளைத் திருத்திக்கொண்டு மீண்டும் காங்கிரசிடமே பொறுப்பை ஒப்படைப்பார்கள்" என்ற நம்பிக்கை தளிர்விட்டது. பத்திரிகைகள் எல்லாம் அவ்விதமே விரும்பின. நம்பின. எதிர்பார்த்தன.

காங்கிரஸ்மீது ஏற்பட்ட வெறுப்பை மக்கள் மறக்கவில்லை என்பதும், புதிய கட்சியான தி. மு. க. வே தொடர்ந்து பதவி வகிக்கட்டும் என்றும் முன்னிலும் அதிகபலத்துடன் மக்கள் தீர்ப்பு வழங்கி விட்டார்கள்.

எண்ணிக்கை பலத்தால் இவ்வளவு வலிய அரசாங்கம் வேறு எந்த மாநிலத்திலும் அமையவில்லை என்ற பெருமை தி. மு. க. வுக்குக் கிடைத்தது.

இப்பொழுது ஆளும்கட்சியைச் சேர்ந்த ஒருவரே முன் வந்து லஞ்ச ஊழல் குற்றச்சாட்டைப் பிரச்சாரம் செய்து அதனால் கழகம் பிளவுபட்டு நிற்கிறது.

பழைய காங்கிரஸ் தலைவர் மக்களிடையே பரவலாக ஏற்பட்டிருந்த உணர்ச்சிகளுக்கு முன்னமேயே குரல் கொடுத்தார். லஞ்ச ஊழல் அதிகமாகிவிட்டது என்பதும், கட்சியின் குறுக்கீடு அன்றாட நிர்வாகத்திலும் அதிகாரிகளிடையேயும் ஒவ்வொரு நிலையிலும் தலையிட்டு ஆளும்கட்சியை சார்ந்திராத மக்களுக்கு எவ்வித சலுகையும் இந்த அரசாங்கத்தில் கிடைப்பதில்லை என்ற பொதுவாக ஏற்பட்டிருந்த உணர்ச்சியே அது.

உறங்கிக் கொண்டிருந்த எதிர்ப்புச் சக்திகளுக்கு இது நல்ல வாய்ப்பாக அமைந்து பத்திரிகைகள் அல்லது திண்ணைப் பேச்சுக்களில் கழகப்பிளவே பெரிய பேச்சாகிவிட்டது. ராஷ்டிரபதியிடம் மகஜர் கொடுத்ததும் ஏதோ அற்புதம் நிகழப்போகிறது என்று எதிர்பார்த்திருந்தவர்களுக்கு விஷயம் சப்பென்று போய் விட்டது. போகிற போக்கைப் பார்த்தால் எதுவும் நிகழ்ந்து விடப்போவதில்லை என்றுதான் தோன்றுகிறது.

இப்பொழுதுள்ள பிரச்னை யெல்லாம் கருணாநிதியா எம். ஜி. ஆரா என்பது ஒன்றுதான் என்பதுபோல இருக்கிறது. இந்த மயக்கத்தை காமராஜ் தெளிவு படுத்தியிருக்கிறார். தி.மு.க. ஆட்சியே வேண்டுமா இல்லையா என்பதுதான் பிரச்னை. இந்தப் பிரச்னை வெறும் கிளர்ச்சிகளால் தீர்ந்துவிடாது. மக்கள் தீர்ப்பு வழங்கும் போதுதான் விடைகிடைக்கும். அது 1976ல் தானா முன்னமேயே ஏற்படுமா என்பது கேள்வி. முன்கூட்டி இந்தத் தீர்ப்பைப்பெற வாய்ப்பில்லை.

எது எப்படியிருந்தாலும், நாட்டில் ஏற்பட்ட வன்முறைகளும் கலவரங்களும் நாகரிக அரசியல் என்று சொல்லமுடியாது. இவற்றால் எல்லாம் எந்தக் கட்சியும் வளர்ந்துவிட முடியாது. ஒரு ஆட்சியைக் கவிழ்த்துவிடவும் முடியாது. — பத்திராதிபர்

# ஆறுகள்

— வல்லலிக்கண்ணன்

இயற்கையின் நிகழ்ச்சிகள் எல்லாமே அற்புதங்கள் தான்.

சூரியன், சந்திரன், கிரகங்கள், விண் மீன்கள்- இவற்றின் இயக்கங்கள்; மழை பெய்வது, பெய்யாமல் போவது; பூகம்பம்; அலைகள் மோதிப் புரள்கின்ற கடல்; ஓடிக் கொண்டேயிருக்கும் ஆறுகள்... எல் லாமே கண்டு, வியந்து, எண்ணி எண்ணி அதிசயிக்கத் தூண்டுகிற அற்புதங்களே.

ஆறு-எங்கோ ஒரு மலையில் ஏதோ ஒரு இடத்தில் மிகச் சிறிதாகப் பிறக்கிறது. துள்ளி ஓடி வருகிறது. மலைகளில் குதித்து, அருவியாய் விழுந்து, பெருகி ஓடுகிறது. அங்கங்கே கிளைநதிகள் வந்து சேரச் சேரப் பெரிதாகி, எங்கெங்கோ எப்படி எப்படி யோ வளைந்து நெளிந்து திரிந்து, கால்வாய் களுக்கும் குளங்களுக்கும் தண்ணீரைப் பகிர்ந்தளித்துக் கொண்டு நகர்ந்து, அணை களால் தடுக்கப்பட்டும், கரையோரம் அழகுகளை வளர்த்தும், தனது எழில் குன் றியும், தளர்ந்து ஓடி, ஏதோ ஒரு இடத் தில் கடலோடு கலந்து விடுகிறது. மழை நாட்களில் வெள்ளம் மிகப் பெற்று, கம்பீர மாக ஓடுகிறது. வறட்சி காலத்தில், ஒடுங்கி நெளிந்து, வெட்கம் கொண்ட பெண் போல், அசைகிறது. இப்படி எத் தனையோ ஆயிரம் வருடங்களாக ஒவ் வொரு ஆறும் ஓடிக்கொண்டேயிருக் கிறது.

மனிதர் தலைமுறைகள் எத்தனை எத் தனையோ பிறந்து மடிந்து கொண்டிருந்த போதிலும் நாகரிகங்களும் ஆட்சிகளும் தலையெடுத்து, வாழ்ந்து, மறைந்தவாறி ருந்த போதிலும் ஆறுகள் தம் இயல்பின் படிஓடிக்கொண்டே இருக்கின்றன.

ஆற்றின் கரைகள் மீது மகத்தானதும் அல்பமானதுமான செயல்கள் எத்தனை எத்தனையோ நிகழ்த்தப்பட்டிருக்கின்றன- செயல்படுத்தப்பட்டுக் கொண்டிருக் கின்றன-மனிதர்களால்.

காலம் காலமாக எத்தனையோ ரக மனிதர்கள் ஆற்றைக் கடந்து போயிருக் கிறார்கள்; ஆற்றில் குளித்திருக்கிறார்கள்; ஆற்றின் கரை மீதும், கரையை ஒட்டியும் போய் வந்தும், வசித்தும், நானாவிதமான செயல்களைச் செய்துமிருக்கிறார்கள். இப் போதும் இவை நடைபெறுகின்றன. இனியும் நடக்கும். எனினும் ஆறு தன் போக்கில் போய்க்கொண்டேயிருக்கிறது.

ஆற்றை ஒட்டிய ரஸ்தாக்கள் இல் லாத காலமும் இருந்தது. ஆற்றின் குறுக்கே பாலங்கள், அணைகள் ஒன்று கூடக் கட்டப்பட்டிராத காலமும் இருந் தது. ஆற்றை ஒட்டி ஊர்கள் வளர்ந்தி ராத காலமும் இருந்திருக்கும்.

அந் நாட்களில் ஆறு தானாகவே பொங்கிப் பூரித்து உருண்டு புரண்டு ஓடிக் களித்திருக்கும். தானாகவே தளர்ந்து மெலிந்து சோர்ந்து நெளிந்து நகர்ந்து நடந்திருக்கும். அளவு மீறிப் பொங்கி வெறி கொண்டு புரண்டு முன்னேறிய சமயங்களில் கரையைத் தகர்த்தும், தடம் விலகியும் பாய்ந்து போயிருக்கவும் கூடும்.

ஒவ்வொரு ஆற்றின் வரலாறும் தனிச் சுவை உடைய கதையாகத்தான் இருக்கும்.

ஆறுகளைக் கண்டு, ரசித்து, வியந்து, சிந்தித்து, ரசமான கட்டுரைகள் எழுதிய பெருமை காகா காலேல்கருக்கு உண்டு. 1940-களில் தமிழில் வெளிவந்த 'சப்த

நதிகள்' என்ற அவரது புத்தகம் படிப்ப தற்கு இனியதாக இருந்தது. அவர் கண்டு வியந்து ரசித்த ஏழு ஆறுகளை, தாயாகவும், சகோதரியாகவும், தோழியாக வும் உருவகித்துக் கட்டுரைகள் எழுதி யிருந்தார்.

சமீபத்தில், இந்தியாவின் நதிகள் பற்றி விரிவாக அவர் எழுதியுள்ள பெரிய புத்தகம் ஒன்று தமிழில் பிரசுரமாகியிருப் பதாகத் தெரிகிறது. அதை நான் பார்க்க வில்லை. நல்ல புத்தகம் என்று சில விமர் சகர்கள் குறிப்பிட்டிருக்கிருர்கள்.

காவேரி குறித்து சிட்டியும் தி. ஜானகி ராமனும் எழுதியுள்ள 'நடந்தாய் வாழி, காவேரி!' எனும் புத்தகத்தைப் படிக்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. காவேரி யின் மாண்புகள், அழகுகள், நதியோர நகரங்கள், பெருமைகள் பற்றி எல்லாம் அருமையாக எழுதியிருக்கிருர்கள். காவேரி பற்றி எவ்வளவோ அறிந்து கொள்ள முடிகிறது.

காவேரியின் பிறப்பே அதிசயங்களில் அதிசயம் தான்.

"காவேரி பிறக்கும் இடம் ஒரு சிறிய சுனை சுமார் நான்கடிக்கு நான்கடி சதுரமாக ஒரு சின்னத் தொட்டி போல் கட்டியிருக் கிருர்கள். அதன் மீது கல்லால் சிறிய அலமாரி போன்ற ஒரு கட்டிடம். அந்தக் கட்டிடத்திற்கும் பின்னல் ஒரு மேடை மீது இரண்டு சிறிய மரங்கள். இந்தச் சிறிய சுனை தான் மலையிலும் காட்டிலும் விழுந்து பெருகுகிறது. நல்ல காரியங் களையும், உலகிற்கு நன்மையையே கருதும் பெரியவர்களுக்கு, பல பக்கங்கள் சேர்வது போல, வேறு பல நதிகளின் நட்பும் கிடைக்கிறது. இப்படியே பெருகிப் பெருகி விரைந்து, சீறும் ஓடையாகவும் அகண்ட காவேரியாகவும் வளர்ந்து வளர்ந்து பலப்படுத்திக் கொள்கிறது. பிறகு தன் உடலையே பல கூறும் கிளைகளு மாக்கி, மாந்தர்களின் உய்வுக்காகவே தன்னை அர்ப்பணித்துக் கொண்டு, கடைசியில் அடக்கமும் பணிவும் சோர்வும் நிறைவுமாகக் கடலில் கலந்துவிடுகிறது."

யுகம் யுகமாக வற்ருத சுனையாக, பொங்கிப் பெருகிக் கொண்டிருக்கும் அந்த ஊற்று இயற்கையின் வரப்பிரசாதம்-மாபெரும் அற்புத நிகழ்ச்சி-என்பதில் சந்தேகமில்லை.

---

**" A and the "**

A daughter in-law was bedevilled by her mother-in-law. The daughter-in-law grew to be a mother-in-law. The mother-in-law bedevilled her daughter-in-law.

T. R. K.

---

தொடர் : 3

# திருப்பாவையில் திருக்குறள்

— P. துரைசாமி, B. A.

மகளிர் பலவகையான அணிகலன்களை அணிந்திருந்தார்கள். பிறந்த வீட்டு அணிகலனும் புக்ககத்துப் பொன்னும் அவர்கள் திருமேனியை அலங்கரித்தன. "காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து வாச நறுங்குழல் ஆய்ச்சியர்" என்னும் வரிகள் முறையே பிறந்தகத்து அணியையும் புக்கத்து மணியையும் புலப்படுத்துவன. கைகளிலே வளையல்களும், காதுகளிலே செவிப்பூவும் தோடும், இடுப்பில் ஒட்டியாணமும், கால்களிலே கொலுசுகளும் அணிந்திருந்தார்கள். "சூடகமே தோள் வளையே தோடே செவிப்பூவே, பாடகமே என்றனையப் பல்கலனும் யாம் அணிவோம்" என்னும் வரிகள் அவர்களுடைய ஆடை அணிகலன்களுடைய சிறப்புக்களைக் கூறுவனவாம்.

கண்ணனே அவர்கள் வழிபடும் தெய்வம். அவனை முழுமுதற் கடவுளாகப் போற்றி வழிபட்டார்கள். ஓங்கி உலகளந்த உத்தமனென்றும், சினத்தினால் தென் இலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கு இனியான் என்றும், புள்ளின் வாய் கிண்டானைப் பொல்லா அரக்கனைக் கிள்ளிக் களைந்தவனென்றும், முப்பத்து மூவர் அமரர்க்கும் முன் சென்று கப்பம் தவிர்க்கும் கலியேயென்றும், உலகினில் தோற்றமாய் நின்ற சுடரென்றும், கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற நெடுமாலேயென்றும், கோல விளக்கே, கொடியே விதானமே என்றும், வாயினால் பாடி மனதினால் சிந்தித்து, தூமலர் தூவித் தொழுது வந்தார்கள். இறைவனைத் தூய உள்ளத்தோடு தொழுதால் எல்லாப் பாவங்களும் தொலையும் என்பதில் அசையாத நம்பிக்கை வைத்திருந்தார்கள்.

"தூயோமாய் வந்து நாம்
தூ மலர் தூவித் தொழுது
வாயினால் பாடி
மனத்தினால் சிந்திக்க
போய பிழையும்
புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசு ஆகும்"

"தூ யோமாய் வந்தோம்
துயில் எழுப் பாடுவான்"

என்பவை அவர்கள் இறைவழிபாட்டிலே வைத்திருந்த நம்பிக்கையையும், அவர்கள் உள்ளப் பாங்கையும் விளக்குவனவாகும். வழிபடும் தெய்வமாகிய திருமாலுக்கு, "கண்ணன், நாராயணன், மாமான், மாதவன் வைகுந்தன், பரமன், மாயன், யமுனைத் துறைவன், வடமதுரை மைந்தன், தாமோதரன், அரி, கேசவன், மூர்த்தி, தேவாதி தேவன், மணி வண்ணன், விமலன், கோவிந்தன்" எனப் பலவகை நாமம் சூட்டி மகிழ்ந்தார்கள். இறைப் பணிக்கு உற்றவர்களைத் தான் உறவினர்களாகவும் உகந்தவர்களாகவும் கருதினார்கள். திருமாலுக்கு இறைபணி புரிபவர்களே தங்களுக்குக் கணவன்மார்களாக வாய்க்க வேண்டுமென்று பெண்கள் விரும்பினார்கள். அப்படிப்பட்ட கணவன்மார்களை அடைய, பாவை நோன்பு நோற்று, குறை இரந்து இறைத் தொண்டாற்றி வந்தார்கள். திருமாலுக்குச் செய்யும் பணியே தெய்வப் பணி என்று கொண்டார்கள். 'குறை ஒன்றும் இல்லாத கோவிந்தா, உன் தன்னோடு உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது" என்றும் 'இற்றைப் பறைகொள்வான் அன்று காண் கோவிந்தா, எற்றைக்கும் ஏழ் ஏழ் பிறவிக்கும் உன் தன்னோடு உற்றோமே ஆவோம், உமக்கே நாம் ஆட் செய்வோம், மற்றை நம் காமங்கள் மாற்றேலோர் எம்பாவாய்" என்றும் அவர்கள் இறைவனிடம் இறைஞ்சிப் பெறும் வரங்களாகும்.

திருமாலிடத்திலே தீவிர பக்தி உடையவர்களாக இருந்த போதிலும், மற்ற மதங்களிடத்தே அவர்கள் வெறுப்புக் காட்டவில்லை. புள்ளரையன் கோயிலும், கங்கை

யும் பிறையுர் சூடும் கண்ணுதலான் கோயி லும் அடுத்தடுத்து இருந்தன. வெள்ளை விளி சங்கின் ஒலியும், முனிவர்களும் யோயி களும் மெல்ல எழுந்து 'அரிஅரி' என்று எழுப்பும் பேரரவமும், காவியுடை தரித்த துறவிகள், தங்கள் திருக்கோயில்களில் சங்கமிடும் ஓசையும் காலை வேலைகளில் காற் றோடு கலந்து பன்னிசை பாடுவதுபோல் இருக்கும். அவர்களிடத்திலே மத மாச்சர்ய மில்லை. அவரவர்கள் ஏற்றுக்கொள்ளும் தெய்வத்தைத் தலைமைத் தெய்வமாகப் போற்றுவதில் சளைக்காதவர்களாக இருந் தார்கள். ஆனாலும் பிற மத சகிப்புத் தன்மையோடு கூடி வாழ்ந்தார்கள். இல்லா விட்டால், பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை, பாவையில்''செங்கல் பொடிக் கூறை வெண்பல் தவத்தவர், தங்கள் திருக் கோயில் சங்கு இடுவான் போதந்தார்'' என்று சிறப்பித்து பாடப்பட்டிருக்குமா ? ''அரி-அரி'' என்று பேரரவம் எழுப்பும் ஒலிகளுக்கு இடையே, காவியாடை புனைந்து வெண்ணிறமான பற்களையுடைய துறவிகள் தங்களுடைய கோயில்களில் மங்களச் சங்கு ஊதும் ஓசை வந்த நிகழ்ச்சி இடம் பெற் றிருக்குமா ?

பாவைக் காலத்து பழந்தமிழர்கள் வாழ்க்கை முறையையும் அவர்கள் நெறி யாகக் கொண்டவைகளையும் ஒருவாறு அறிய, திருப்பாவை திறவு கோலாக உள் ளது என்று சொல்லலாம். தமிழினத்தின் வாழ்வில் அக்கறை காட்டுபவர்கள் திருப் பாவையைப் பன்முறை ஓதி பயன் பெறு வார்களாக.

## திருப்பாவை - இயற்கை காட்சியும் அதன் நயமும்

திருப்பாவை முழுவதும் இயற்கைக் காட்சிகள் பின்னிப் பாடப்பெற்றவை. கதைக்கு கால், காது மூக்கு வைத்துப் பேசப் படுவதுபோல, சிறந்த இலக்கிய நூட் களுக்கு இயற்கைக் காட்சிகள் அணிகலனாக அமைகின்றன. சுற்றுச் சூழ்நிலையோடு பேசப்படும் பொழுது, சொல்ல வந்த கருத்து மனதில் ஆழப்பதிந்து விடுகிறது. பலவகை அணிகளும் அலங்காரங்களும் இயற்கை வருணனைகளும் இல்லாமற் பாடற்பெற்று இருக்குமாயின் கம்ப ராமயணத்தை தலை சிறந்த காவியமாகப் போற்றுவோமா? உயர்ந்த தத்துவார்த்தப் பொருளை எளிதில் புரிய வைப்பதற்கு இயற்கைக் காட்சிகள் பெரிதும் துணை செய்கின்றன. கோசல நாட்டை சரயூ நதி வளப்படுத்துகிறது. அதன் வெள்ளம் பல நிலையை அடைகிறது. இதில் கம்பர் பரம்பொருளின் தத்துவத்தையே உணர்த்துகின்றார். பரம்பொருள் ஒன்றே யாயிருப்பதுபோலச் சரயூ நதியின் வெள்ளம் ஒன்றே யாயிருந்தும், பல சமயத்தவர் சூழ்ச்சிக்கு உட்பட்டு அப் பரம்பொருள் பல வாருகப் பேசப்படுவதுபோல, சரயூ நதி ஏரி தடாகம் முதலிய பல இடங்களிற் பொருந் திப் பல பெயருடனே வழங்கலாயிற்று என வும், பல்பெரும் சமயங்களும் பரம்பொருளை நாடுவது போல, சரயூ நதியின் பலவகைப் பட்ட பிரிவுகளும் முடிவாகக் கடலில் கலக் கின்றன என்றும், பரம்பொருள் பஞ்ச கிருத் தியங்களை இடையறு இயக்குவது போல, கடலில் கலந்து சரயூ நதியும் பின் ஆவியாக மாறி, மேகமாக எழுந்து, மழையாகப் பொழிந்து, மலைச்சாரல்களிடையே வழிந்து, நதியாக ஓடி, மக்கள் உயிராக இலங்குகின் றது எனவும், பரம்பொருள் எங்கும் பரவி யிருந்து அளவிலாக் கருணையை வாரி வழங்குவது போல, சரயூ நதி, கோசலம் முழுவதும் பரவி வளமை உண்டாக்கியது எனவும் பொருள்படும்படி, பால காண்டத் தில் ஆற்றுப்படலத்தில் வரும் கம்பன் கவிதை சிந்தனைக்கு விருந்தளிப்பதாகும்.

'' கல்லிடைப் பிறந்து போந்து
கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைகளாலும் இயம்பரும்
பொருள் ஈதென்னத்
தொல்லையில் ஒன்றே யாகித்
துறைதொறும் பரந்த சூழ்ச்சி
பல்பெரும் சமயம் சொல்லும்
பொருளும் போல் பரந்த தன்றே !

சரயூ நதி இமயமலையில் உற்பத்தியாகி, முடிவில் கடலில் கலக்கின்றது. ஆனால், இடையில் பல இடங்களில், ஏரி குளம் போன்ற பெயரில் பலவாருகப் பிரிந்து மீண் டும் ஒன்று கூடி, முடிவில் கடலில் கலந்து, ஆவியாகச் சென்று, மேகமாக மாறி, மழை யாகப் பெய்து, தோன்றிய இடமாகிய இமய மலைக்கே மீண்டும் வந்து சேருகின்றது.

இதுதான் கவிஞர் சொல்லவந்த செய்தி. ஆனால் இதன் தோற்றமும் முடிவும் பரம் பொருளோடு இணைத்துப் பேசப்படும் பொழுதுதான், அதன் சிறப்பு மேலும் சிறக்க விளங்குகின்றது. சரயூ நதி தோன்றியது, ஓடியது, பாய்ந்தது, கலந்தது, மீண்டும் வந்தது என்று சொன்னால், அதிலே நமது சிந்தனை செல்வதில்லை. அது தோன்றும் விதமும், ஓடும் முறையும், மாறும் பான்மையும், கலக்கும் தன்மையும் பரம்பொருளோடு இணைத்து ஒப்பிட்டுப் பேசப்படும் பொழுது, நாம் கவிதையிலே ஒன்றுவதோடு, சிந்தனையிலேயும் தெளிவு கொள்ளுகின்றோம். இவ்வகையில் சிந்தனைக்கும் செவிக்கும் விருந்தாக வருவது பாவைப் பாட்டுகளாகும். ஆண்டாள் இயற்கைக் காட்சிகளை எங்ஙனம் படம் பிடித்துக் காட்டுகின்றாள் என்பதைச் சற்று ஆராய்வோம்.

மழை பெய்கின்றது. ஆனால் அது பெய்வதற்கு முன்பாக எத்தனைத் தோற்றம் பெறுகிறது. நடுக்கடலுக்குள் புகுந்து நீர் முழுவதும் முகந்து கொண்டு, ஆவியாகச் செல்வது முதற்தோற்றம்; ஆவி மேகமாக மாறுவது இரண்டாவது தோற்றம்; மேகம் உடுப்பது மூன்றாவது தோற்றம்: மின்னலோடு கூடி, இடி இடிப்பது நான்காவது தோற்றம்; இடியோடு மழை பெய்வது ஐந்தாவது தோற்றம். கடல் நீர் ஆவியாகப் போய் மேகமாக மாறி, மின்னி, இடி இடித்து, மழை பெய்கின்றது என்ற ஒரே வரியில் மழையின் தன்மையைக் கூறி விடலாம். ஆனால் படிப்பவர்களும், கேட்பவர்களும் அதைப் பொருள் உணர்ச்சியோடு அறியமாட்டார்கள். அதன் ஒவ்வொரு தோற்றமும் எப்படி இருக்கிறது, என்று நயம்பட உரைக்கும் போதுதான் கேட்பவர்கள் இதயங்களை கழி பேருவகை கொள்ளச் செய்ய முடியும். ஆண்டாள் பாடுவதை பாருங்கள் :

‘‘ஆழி மழைக்கண்ணா
ஒன்று நீ கைகரவேல்
ஆழியுள் புக்கு
முகந்து கொடு, ஆர்த்து ஏறி
ஊழி முதல்வன்
உருவம் போல் மெய்கறுத்து
பாழி அந் தோளுடைப்
பற்மநாபன் கையில்
ஆழிபோல் மின்னி
வலம்புரி போல் நின்று அதிர்ந்து,
தாழாதே சார்ங்கம்
உதைத்த சரமழைபோல்
வாழ உலகினில்
பெய்திடாய்; நாங்களும்
மார்கழி நீர் ஆட
மகிழ்ந்தேலோர் எம்பாவாய்’’

உயிரினங்கள் வாழ மழை வேண்டும்! ஆனால் அந்த மழை எப்படிப்பெய்ய வேண்டும்? ஆண்டாள் கட்டளை இடுகின்றாள். மழைக் கடவுள் கண்ணனுடைய திருமேனி அழகு பெற்றுத் திகழ வேண்டுமாம்; அவனது வலக்கையிலுள்ள சக்கராயுதம் போன்று ‘‘பளிச்’’ ‘‘பளிச்’’ என்று மின்ன வேண்டுமாம்; அவன் இடக்கையிலுள்ள வலம்புரிச் சங்கின் முழக்கம் போன்று, இடி இடிக்க வேண்டுமாம்; கண்ணனுடைய சார்ங்கம் என்ற வில்லிலிருந்து வெளிப்படும் அம்புகள் போல மழைத்துளிகளை உதிர்க்க வேண்டுமாம்: அப்பப்பா! என்ன கற்பனை!! இறைத் தன்மையோடு ஏற்றி, பேசப்படும் கற்பனை எவ்வளவு இயற்கையாக அமைந்துள்ளது! மழை பெய்யும் முறையைக் கூற வந்த ஆண்டாள், கண்ணனுடைய திருமேனியை எவ்வளவு அழகாக உவமையோடும் நயத்தோடும் புலப்படுத்துகின்றாள்! மழை உலகிற்கு எவ்வளவு அவசியமோ, அதைவிடக் கண்ணனுடைய அருள் மழை இன்றியமையாதது என்பதை எவ்வளவு அழகாக இறைவனோடு ஒன்றக் கூடிய உணர்ச்சியோடு உணர்த்துகின்றாள்! மற்றும் கண்ணனை உவமானமாக்கியது நயத்தின் மேம்பாட்டை உணர்த்துகிறது.

ஆயர்பாடியில் மருத நிலத்து வளம் மிகக் கற்பனையோடு பேசப்படுகின்றது. பெற்றம் மேய்த்து உண்ணும் குலத்தில் பிறந்த கண்ணனுடைய திருப்பதி அல்லவா? ஆகவே, மழை குறைவின்றியும், தீங்கு இன்றியும், பெய்கிறது. அதனால் மருத நிலத்துக் கழனிகளில் செந்நெல் ஓங்கி வளர்த்துள்ளது. வயல்கள் தோறும் நீர்த் தேக்கம். அதிலே கயல்-மீன்கள் துள்ளி விளையாடுகின்றன. குவளை மலர்களில் வண்டுகள் உறங்குகின்றன. ஆயர்பாடிப் பசுக்கள் குடம் நிறைப் பால் கறக்கின்றன: (வளரும்)

Tamil Noval :
M. V. Venkatram
Translated By :
Prof. K. G Seshadri



# NECTAR - 10

When I came to, all that happened rushed back to my memory like a dream remembered. I even thought the whole thing might have been only a dream. As I was just thinking if even my touching the body of the dead Sadasivam was a dream, the voice of Sadasivam was heard saying, Art not awake yet ?'.

Fear gripping me again, I sat up and rubbed my eyes.........

with the colour of an erect and steadily burning flame and a calm smile inspiring calm, he stood in front of me... 'I am not dead; steady yourself; leave of your doubt and confusion.'

'Pardon me, Sir,' said I and fell at his feet. He raised me up with both his hands lovingly.

'Sir' what happened to me ? Have I gone mad ?'.

'Can anyone be mad, when he never loses his consciousness of his 'Self ?'.

What was it then that stopped me at your threshold ?'

'That was Illusion-the horrible shape of Ignorance Mayer. It waylaid you to prevent your entry here, when it knew that the time for the flowering of God-knowledge in your spirit had arrived. Its only function is to push human souls into the bottomless pit of evil action and sink them into the darkness of Ignorance. It tried to turn you away from your search for Truth, into the path of Evil Action. God has saved you.'

'Sir, Please explain everything in detail', I begged.

'All that happened was a drama, in which your spirit was the hero. It was only your soul, that, wearied of the apparently endless cycle of births and deaths, cried out for help, "Who am I ? Save me, O Lord, Save me". Your anguished soul is clamouring for release from the bondage of birth, so that it may regain its original state of being of Eternal Bliss. Only to remind you that the time for that has come, have I come to your place. It has been so ordained by God. When you came towards my room, I was in a state of Bliss- 'Nirvikalpa Samadhi'. God has used me as an instrument to reveal to you the true nature of your Self. Reflect calmly. All that happened will become clear to you'.

'Oh, what an ecstatic happiness I experienced during those few moments !', I exclaimed.

'The happiness you enjoyed was not Perfect Bliss. It was only a droplet. God fed you a speak of it, just to give you a foretaste of the Ineffable Joy of God-Knowledge. Not all can have this rare experience. You have been very fortunate. Try earnestly; you will apprehend Truth within you and attain the Perfect Bliss that passeth understanding'.

'They say that such good fortune cannot be easily had by householders,' I asked.

'That is not so. Not only yourself, but Rani also will be liberated. It is not as if only an ascetic can realize God'.

'You have to tell me Sir, what I must do for that.'

'God does not expect elaborate rituals or pompous poojas. Ceaseless meditation, thinking of Him always-whether you are working or relaxing from labour-that is the way for yon

for the present. Later, when you need help, I shall come again.'

Then, he initiated me with the sacred six-leter 'Mantra'-'Shataksharam'. I prostrated before the holy feet of my preceptor and rose up.

'May you become Muruga'-he blessed me and bade me farewell 'May you live happily with Rani, begetting good sons and daughters. May your life be full of Peace. Farewell!' he said.

●

'Rani! I went to him thinking of cleaning up a stagnant pond, but I have dived into a deep sea and discovered a priceless pearl'. As I spoke to my wife in sober joy, she stooped before me in silent salutation-her tears laving my feet, as if she saw in me SADASIVAM himself.....

●

I did not meet my Master afterwards. But I am treading the path shown by him, I have the confidence that if I need a fellow-traveller's aid in my Life's Journey at any time, he will surely appear beside me.

[ END ]

# மேலோர்

— கோவை C. A. அய்யாமுத்து

உழுதுபயிர் செய்வதுவே உண்மைச்செல்வம்
உறுதியிலை பிறிதெலாம் உயர்வுமாகா

பழுதின்றி வாழ்வதற்குப் பாதைகாட்டும்
பண்பாளன் பாரினுக்கோர் பகவனாவான்

பாழ்பிணிகள் போக்குதற்குப் பயிற்சிபெற்ற
பண்டிதரும் மக்களுக்குப் பந்துமாவார்

சூழ்பஞ்சம் தீர்ப்பதற்குத் துணிந்துபண்டம்
தொலைசென்று கொண்டுவரும் வணிகர்—மற்றும்

யாழ்கொண்டு இசைமீட்டி இன்பஞ்சேர்க்கும்
பாணனுமெய்க் காதலியாம் பெண்ணும்-நாட்டின்

விழிகளென விறல்காக்கும் மறவர்தாமும்
விண்ணவர்க்கு ஒப்பாவார்—வேறார்மேலோர்?

கலியுகத்தில் இவரெலாம் கணக்கைமீறி
காசுபெறக் கற்றதினால் கீழோரானார்.

# கம்ப காவியத்தில் விடுகதை

— அரங்க. சீனிவாசன்

நம் நாட்டில் விடுகதை கூறுவதும், பிறர் அதை விடுவிப்பதும் தொன்று தொட்டு வரும் சுவையுடைய பொழுதுபோக்காகும்.

விடுகதைகளை'' மெய்ந்நிலை மயக்கின் ஆகுந'' என்று தொல்காப்பியர் குறிப்பிடு வதிலிருந்தே, விடுகதைகளின் பழமை தெளி யப்படும். உரையாசிரியர்கள் விடுகதை யைப் ''பொருள் மயக்காகிய பிசிச்செய்யுள்'' என்கின்றனர். அதற்கு எடுத்துக் காட்டாக, செவ்வியவெண்பாவான் அமைந்த விடுகதை ஒன்றும் காட்டியுள்ளனர்.

''எழுதுவரிக் கோலத்தர்;
ஈவார்க்கு உரியார்''
தொழுதிமைக் கண்அணைந்த
தோட்டார்; முழுதுஅகலா
நாணிற் செறிந்தார்;
நலங்கிள்ளி நாடோறும்
பேணற்கு அமைந்தார்
பெரிது.

இந்த விடுகதையை மேல் எழுந்த வாரி யாகப் பார்ப்பின், ஒரு பெண்ணைப் பற்றிய தாகத் தோன்றுகிறது,

''உடம்பின்கண் எழுதுகின்ற வரிக் கோலம் உடையவர்; பெற்றோரால் தரப் படுவாருக்கே உரியர்; திரண்ட மையுண்ட கண்களால் அணையப்பட்ட தோடுகளை யுடையவர்; முற்றும் நீங்காத நாணத்தால் செறியப்பட்டவர்; நலங்கிள்ளி என்னும் மன்னனால் நாடோறும் பெரிதும் விரும்பு தற்கு அமைந்தவர்'' என்று பொருள் கொண்டால் ஒரு பெண்ணையே குறிக்கிறது.

''எழுதப்படுகின்ற கோடுகளாகிய கோலத்தைக் கொண்டது; ஆசிரியனால் கற்பிக்கப்படுகின்ற மாணவனுக்கே உரியது; திரண்ட மைதடவிய இடத்தை அணைந்த ஓலையால் ஆனது; முற்றிலும் நீங்காத கயிற் றினால் கட்டப்பட்டது; நலங்கிள்ளியால் நாடோறும் பெரிதும் காக்கப் பெறுவது'' என்றும் பொருள் கொள்ளலாம் அன்றோ?

இவ்வாறு பொருள் கொள்ளும் போது, ஓலைச்சுவடி (புத்தகம்) ஆகிறது.

விடுகதை என்பது இருபொருள்படும்படி கூறி, (ஒரு பொருளை மறுத்தோ, மறுக்காம லோ) உண்மைப் பொருளைக் கூறும்படி கேட் பதாகும்.

''அந்தரத்தில் பறந்துவரும்,
பறவை அல்ல;
அழகான வால்உண்டு,
அனுமான் அல்ல;
விந்தையுடன் கட்டுண்ணும்
புல்லும் அல்ல;
விடுகதையை ஒருநொடியில்
விளம்புவீரே!''

என்பது ஒரு நாடோடி விடுகதை. அதற்கு விடை ''பட்டம்'' யாகும்.

பெரும்பாலும் நாடோடி இலக்கிய மாகவே விடுகதைகள் வழங்கி வருகின்றன. இத்தகைய விடுகதைக்குப் பேரிலக்கியத்தில் இடம் தந்துள்ளான் கம்பன்.

கம்பனுவது? விடுகதையாவது? இராம காதையில் அது இடம் பெறுவதாவது? என்று சிலர் வியப்புறலாம்.

ஔவையாரைத் தாழ்த்தக்கருதிய கம்பன் ஒரு விடுகதை கூறுயதாகவும், அதற்கு ஔவை கம்பனைத்தாக்கி இரு பொருள்பட விடையிறுத்ததாகவும் ஒரு வரலாறு வழங்குகிறது.

''ஒரு காலடி! நாலிலைப் பந்தலடி'' என்பது கம்பன் கேட்ட விடுகதை. ''அடீ'' என்று தன்னை அழைத்ததால், ஔவைக்குச் சினம் மூண்டது. கம்பனுக்கு அறிவு புகட்டக் கருதிய ஔவை உடனே,

''எட்டேகால் லட்சணமே!
ஏமன்ஏ றும்பரியே!

மட்டில் பெரியம்மை
"வாகனமே! முட்டமேற்
கூரையில்லா வீடே!
குலராமன் தூதுவனே!
ஆரை யடா சொன்னுய்
அடா!''

என்று விடையிறுத்தாளாம்.

இந்த வெண்பாவின் முதல்மூன்று அடிகளும் கம்பன்மேல் குறிப்பாற்கூறிய பெருவசை மொழியாம். இறுதியடியாகிய'' ஆரையடா சொன்னுய் அடா'' என்பதற்கு, ''அடி என்று யாரைச் சொன்னுயடா?'' என்ற வசைப்பொருளும், விடுகதைக்கு விடையும் ஒருங்கே அமைந்து சுவைபயக்கின்றது.

ஆரைக்கீரை எனக் கீரை வகையில் ஒன்று உண்டு. அது பெரும்பாலும் நீர்வளமுள்ள இடங்களில் வளர்வது ஒரே தண்டின் உச்சியில் நான்கு இலைகளே இருக்கும். அந்த இலைகளும நான்கு பிளவாகப் பிரிந்து இருக்கும். இதையே கம்பன்; ''ஒரு கால் அடி! நாலிலைப் பந்தலடீ!'' என்முன். அதற்கு விடையாக'' ஆரையடா சொன்னுய்-அதாவது நீ ஆரைக்கீரையைத்தான் சொன்னுய்!'' என்றும் பொருள்படும்படி ஔவை சொல்லிக் கம்பன் செருக்கை அடக்கினுளாம்.

கம்பன் மட்டுமா விடுகதை சொன்னுன்? ''கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்'' என்பது பழமொழியன்ருே? கட்டுத்தறி கவி பாடியதோ? இல்லையோ? அவன் வீட்டு வெள்ளாட்டி (வேலைக்காரி) சிறந்த விடுகதை ஒன்று கூறியிருக்கிருள்.

''வட்டமதி போல் இருக்கும்;
வன்னிக் கொடி தாவும்;
கொட்டுவார் கையினின்று
கூத்தாடும்; — சுட்டால்;
'அரகரா' என்னுமே
அம்பலசோ மாசி!
ஒருநாள் விட் டேன்
ஈது உரை!''

என்பதே கம்பன்வீட்டு வெள்ளாட்டி பாடிய விடுகதை.

இந்த விடுகதையை அவள், அம்பலசோமாசி என்பவனிடம் கேட்டாளாம்.

சாணியால் தட்டப்படும் வறட்டி என்பதே அதற்கு விடை. வறட்டி சந்திரனைப் போல வட்டமாக இருப்பதால் "வட்டமதி போல் இருக்கும்" என்றாள். வன்னிக் கொடி என்பது நெருப்புக்கொழுந்து. வறட்டியை நெருப்பிலே இட்டால், தீக்கொழுந்து அவ் வறட்டியில் பற்றித் தாவுமன்றோ? அதனால் "வன்னிக்கொடி தாவும்" என்றாள். வறட்டி தட்டும்போது, தட்டுபவர் கையில் அது கூத்தாடுவது போல் தோன்றுவதால், "கொட்டுவார் கையினின்று கூத்தாடும்" என்றாள். வறட்டியைச் சுட்டால் சாம்பல் ஆகும். அதுதான் திருநீறு. திருநீறு பூசுவோர், "அரகரா!" எனக்கூறித் தம் நெற்றியில் இடுவர். அதனால், "சுட்டால் அரகரா என்னும்" என்றாள். இந்த விடுகதைக்கு ஒருநாள் அவகாசம் தந்தும் சோமாசியால் விடைகூற இயலவில்லையாம்.

இத்தகைய சிறந்த விடுகதையை அழகிய வெண்பாவில் அமைத்துக் கூறிய அந்த வெள்ளாட்டி, விடையையும் அழகிய பாடலாகவே கூறியிருத்தல் வேண்டும். ஆனால் அப்பாடல் நமக்குக் கிடைத்திலது.

இனி இராம காதையில் கம்பன் இணைத்துள்ள விடுகதையைக் காண்போம். நகரப் படலத்தில் மாளிகைகளை ஓவியம் தீட்டிக் காட்டவந்த கம்பன், இந்த விடுகதையை அங்கு அமைத்துள்ளான்.

"பாடகக் காலடி பதுமத்து ஒப்பன!
சேடரைத் தழீஇயன; செய்ய வாயின;
நாடகத் தொழிலின; நடுவு துய்யன;
ஆடகத் தோற்றத்த மகளிர் அல்லவே'.

இப்பாடலின் பொருளை நோக்குவோம்.

பாடகம் என்பது காற்சிலம்பு. "பாடகக் காலடி பதுமத்து ஒப்பன" என்பது, சிலம்பு பூண்ட பாதங்கள் தாமரை மலரை ஒத்துள்ளன என்றும், "சேடரைத் தழீஇயின" என்பது, பணியாளரை ஏவல் கொள்வன என்றும், செய்ய வாயின (செய்ய ஆயின) என்பது, சிவந்த நிறமுடையன என்றும், "நாடகத் தொழிலின" என்பது, நடனக் கலையைக் கற்றுள்ளன என்றும், "நடுவு துய்யன" என்பது, நடுப்பகுதி இளநூற்பஞ்சு போன்று மிருதுவானவை என்றும், "ஆடகத் தோற்றத்த" என்பது, பொன்னைப் போன்ற நிறப் பொலிவுடையன என்றும் பொருள்படுகின்றதன்றோ? ஆதலால், இதற்கு விடை மகளிர் பாதங்கள் என்று கொள்ளலாமெனத் தோன்றுகிறது.

ஆனால் "மகளிர் அல்ல" என்று விலக்கப்படுவதால், இதற்கு விடை வேறுதானே இருத்தல் வேண்டும்! இனி அந்த விடையை நோக்குவோம்.

"பாடகக் காலடி (பாடு அகக்கால் அடி) பதுமத்து ஒப்பன" என்பது, பெருமையுடைய வீட்டுத் தூண்களின் அடிப்பாகம் தாமரைமலர் போன்ற வேலைப்பாடு அமைந்தன என்றும், "சேடரைத் தழீஇன" என்பது, அந்தத் தூண்கள் ஆழமாக நிறுத்தப் பட்டிருப்பதால், பாதாளஉலகிலுள்ள சேடர்களை (நாகர்களை)த் தொடுவன என்றும், "செய்யவாயின" என்பது, செவ்விய இடங்களையுடையன என்றும். "நாடகத் தொழிலின" (நாடு அகத் தொழிலின) என்பது, யாவரும் ஆராய்கின்ற உட்புறத் தொழிலுடையன என்றும், "நடுவு துய்யன" என்பது நடுவிடம் தூய்மையானவை என்றும், "ஆடகத் தோற்றத்த (ஆடு அகத் தோற்றத்த)" என்பது ஆடரங்குகளைப் போன்ற தோற்றத்தையுடையன என்றும் பொருள்படுகிறதன்றோ? ஆதலால், மாளிகைகள் என்ற விடை கிடைக்கிறது.

கம்ப காவியம் ஒரு பெருங்கடல். அதில் மூழ்குவார்க்கு எத்தனை எத்தனையோ முத்துக்கள் மூழ்குந்தோறும் கிடைத்துக் கொண்டேயிருக்கும்.

" எல்லாப் பொருளும்
இதன்கண் உள; இதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லை"

என்று குறளுக்குக் கூறிய சிறப்புரை கம்ப காவியத்துக்கும் பொருந்தும் என்பதை மறுக்க இயலுமா!

# இலக்கியப் பிரக்ஞை
## (Literary Conscience)

— " கரிச்சான் குஞ்சு "

திடீரென்று ஒருநாள் தபாலில் "கணையாழி" என்ற இலக்கிய மாதஇதழ் என்னைத் தேடி வந்தது. டில்லியும் சென்னையும் இணைந்து இலக்கியக் கலைவளர்க்கும் ஒரு நல்ல செய்தியின் அடையாளம் இது என்ற அளவில் கணையாழியைப் பற்றி எனக்குத் தெரியும். ஆவலுடனும் ஆர்வத்துடனும் அந்த இதழைப் படித்துமுடித்தபின், அதன் ஆசிரியருக்குக் கடிதமொன்று எழுதினேன்; அதை அவர்கள் வெளியிட்டார்கள் அடுத்த இதழில் இதோ அந்தக் கடிதம்.

"உங்கள் புதிய இலக்கிய முயற்சிகளுடனெல்லாம் நன்கு பழகிக்கொள்ள எனக்குக் கொள்ளை ஆசை. மாலை 3மணிமுதல் 5-30 வரை கணையாழி இதழ் முழுவதையும் படித்து முடித்தேன்; அதன் ஆரம்ப காலத்தில் 'காவிய ராமாயணம்' வந்தவோர் இதழ் படித்த நினைவிருக்கிறது. பிறகு இன்றுதான் கிடைத்தது; அதிலும் எண் நண்பர் ஸ்ரீ. தி ஜா. அவர்களுடைய நாவல் ஆரம்பமாகிறது. மிகவும் மகிழ்கின்றேன். இந்த இதழுடன் இரண்டரை மணிநேரம் பழகியதால், ஏதோ புதியதோர் உலகுடன் பழகிய அனுபவம் தோன்றுகிறது. ஆங்கிலப்படம் ஒன்றுகூட நான் பார்த்ததில்லை. ஆங்கில நாவல் படிக்கும் அளவு படிப்பு இல்லாதவன் நான். சிறுகதை, நாவல் ஆகியவற்றில் தரமுள்ள புதிய முயற்சிகள் தொடங்கப்பட்ட காலத்திலும், பிறகும், ஐரோப்பிய இலக்கியத்தின் Influence தமிழின் உருவம் உள்ளுறைகளில் இருப்பது பற்றியும் அதன் நியாயம் பற்றியும் பிறர் பேசிக் கேட்டதுண்டு; இப்போது அது மேற்கத்திய பழைய புதிய உலகங்களின் Sway யிலேயே சிக்கிவிட்டதோ ? இது அறியான் வினா. தமிழ் எழுத்தாளர்களைப் பிற நாட்டு எழுத்தாளர்களுடன் ஒப்பிட்டுப் பேசும் கட்டம் கடந்து, நம் எழுத்தாளர்கள், பிற நாட்டவரின் நிழல்களாக ஆவதுதான் இன்றைய இலக்கிய வளர்ச்சி என்று, அழுகுண்ணிச் சித்தன் பாணியில் போய் விடவில்லை நான். இருந்தாலும் அந்தப் பெயர்கள் அடிக்கடி இடம் பெறுகின்றனவே !"

இதைப்பார்த்த என் நண்பர் இருவர் எனக்குக் கடிதங்கள் எழுதியிருக்கிறார்கள் அவர்கள் இருவருமே என்னை அறிந்த இலக்கியவழி நண்பர்கள். திறந்த மனத்துடன் சிந்தித்துப் பார்த்து முடிந்தால் பதில் எழுதவேண்டுமென்றும் கேட்டிருக்கிறார்கள். அவர்கள் உண்மையாகவே இலக்கிய நண்பர்களானால் சிவாஜி ஆண்டு மலரைப் பார்க்கத் தவறமாட்டார்கள். ஆகவே என் திறந்த மனத்து எண்ணங்களை எழுத முற்படுகிறேன். அவர்களுக்கு மட்டுமின்றி, இலக்கிய அக்கரையுள்ள வேறு சிலருக்கும் சொல்லநினைத்து இதை எழுதுகிறேன். என் நண்பர்கள் எனக்கு எழுதிய கடிதத்தின் சாரம் இதுதான். இரண்டே கருத்துக்கள்.

1) அழுகுண்ணிச் சித்தனாக உனக்குத் தகுதியில்லை; அந்த அளவுக்கு ஞானபக்குவம் இல்லாதவன் நீ; நீ தோற்றவன்; இதை ஒப்புக்கொண்டு ஒதுங்கிக்கொள்; அல்லது முடிந்தால் போட்டிக்குவா. 2) இங்கிலீஷ் படிக்காத ஒருவனால், இந்த இருபதாம் நூற்றுண்டின் முடிவில், உருப்படியாக ஒரு வகையிலும் இலக்கியம் படைக்க முடியாது, ஆகவே நீ முழு வாசகனாக மலரப்பார்; விமர்சகனாக வரவும் விரும்பாதே; ஆனால் முப்பது வருஷங்களாக நீ எழுதியிருக்கும் சிலவற்றுள் சிலவற்றிற்கு இலக்கிய அந்தஸ்து கட்டாயம் உண்டு. இத்துடன் திருப்திப்படு'

உண்மையிலேயே பல காலம் பழகிய நண்பர்களுடைய கருத்து. உண்மையான கருத்தும்கூட ஒப்புக்கொள்ளத் தடை

இல்லை; ஆனால் ஒரு வாசகனாயிருந்து பார்க்கும்போது, இன்றைய இலக்கியப் பிரக்ஞை பற்றிச் சிந்திக்கும் போது, அந்தச் சிந்தனையை வெளியிடும் போது. அதில் விமர்சனத் தொனி கேட்கத்தான் செய்யும்; அதை மன்னிப்பார்களாக.

ஆனந்தபோதினி ஆனந்தவிடன், பிரசண்டவிகடன், கல்கிபோன்ற பத்திரிகைகள் மூலமாகத் தமிழில் புதியகதைகள் நாவல்கள் வளர்ந்தன. படித்தோம். வடுவூர் துரைசாமி அய்யங்கார், ஆரணி முதலியார், வை. மு. கோதைநாயகியம்மாள் போன்ற பலரும் நாவல்கள் எழுதிக்குவித்ததுண்டு; படித்தோம், தூய இலக்கியப் பிரக்ஞையுடன் மணிக்கொடி தோன்றி மறைந்தது. புதுமைப் பித்தன் துணிந்து தமிழ் நாட்டின் மிகப்பிரபலமான எழுத்தாயிருந்தவற்றின் போலித்தனத்தையும் இரவல் தன்மையையும் எடுத்துக் காட்டி நல்ல இலக்கியப் பிரக்ஞை தோன்றப்பாடுபட்டார்; வல்லிக்கண்ணன் மாரீச இலக்கியங்களைச் சாடினார்; ஆனால் அவை மங்கி மறைந்துவிடவில்லை; மாருகச் செழித்தன. வியாபாரப் பொருளாகிக்காசு பணம், புகழ் பெருமையெல்லாம் பெற்றது அந்த இலக்கியமல்லாத எழுத்து. ஆசாரமாகத் தொடங்கி, ஐயர்வாளுடைய அருமையான புதிய தமிழ்வளர்த்த கலைமகள் கதைப் பத்திரிகையாக மாறியது. இலக்கியப் பிரக்ஞையுடைய படைப்பிலக்கியம் தரஆரம்பித்தது; மெல்ல மாறிற்று. குமுதம் வந்தது. தொடர்ந்து பரிணமம் அடைந்து, மக்கள் மனத்தைக் கவர்ந்து, இன்று தமிழிலேயே அதிகம் விற்கும்பத்திரிகையாகித் திகழ்கிறது. பெரிய பத்திரியையாக வளரவேண்டுமானால், குமுதமே ஆதர்சம் என்றிருப்பதில் வியப்பில்லை. தினமணிக்கதிர் போடு போடன்று போடுகிறது. சென்னைக்கு இப்பால் திருச்சியிலும் கும்பகோணத்திலும் முன்பும் பின்புமாய் இலக்கியப் பிரக்ஞை தோன்றிப் போட்டி போடமுடியாமல் மறைந்தது. க. நா. சுவும், சி. சு. செ. யும் போன்றவர்கள் செய்த முயற்சியில் இந்தப் பிரக்ஞை இயக்கம் படர்ந்து பரவிக்கொண்டிருக்கிறது. தீபம் இதழ்களில் திரு. எஸ். ராமையா எழுதிய மணிக்கொடிக் காலம் பற்றிய கட்டுரைகள் சூடு பிடிக்கச் செய்தன; அதே சூட்டில் திரு. வல்லிக்கண்ணன், சாசுவதி காலம் என்று தொடங்கி, விண்டு விண்டு வைத்தார் இலக்கியப் பிரக்ஞையை.ஞானரதம் புறப்பட்டது. கணையாழியும் சேர்ந்தது. புதுத்தெம்புடன் பிரக்ஞை இயக்கம் நடக்கிறது. வெற்றி பெறவேண்டும்; வியாபாரம் குறுக்கிடுமே. கதை எழுதுகிறவர்களுக்கும் நாவல் எழுதுகிறவர்களுக்கும் கை நிறையக் கொடுக்கின்றனவே ஆனந்த விகடனும் குமுதமும் இருபத்தைந்து வருஷங்களுக்கு முன், சென்னையில் நடந்த இலக்கிய அன்பர்கள் வாரக் கூட்டங்களுக்குக் கும்பகோணத்திலிருந்து நானும் என் நண்பர் ஒருவரும் வாரம் தவருமல் சென்று திரும்பிக்கொண்டிருந்தோம். மணிக்கொடி மீண்டும் தோன்றி மறைந்த காலம் அது. என் நண்பருடைய தந்தையார், மஹாபண்டிதர், ரஸிகர். கலைஞர் சிரித்துக்கொண்டே சொன்னது நினைவுக்கு வருகிறது. "பணம் வியாபார வளர்ச்சி இவற்றுடன் சேராமல், வறட்டுக்கலையார்வம் வளர்வதிலோ, வளர்ப்பதிலோ என்ன பயன் இருக்கமுடியும்" என்று கேட்பார் அவர். அதுதானே இன்றைய நிலையும். இலக்கியப் பிரக்ஞை என்கிருேமே, இதென்ன சிலருக்கே ஏகபோக உரிமையா? விகடனில் அருமையான கதைகள், நாவல்கள் வரவில்லையா? கவிதை கூடக் குமுதத்தில் வருகிறதே, விகடனில் கவிதை தொடர்ந்து வருகிறதே. அவர்களுக்கும் பிரக்ஞையில் குறைவில்லையே. நியூ வேவ் (சிலர் நியூடுவேவ் என்பர், சிலர் நியூஸன்ஸ் வேவ் என்பர்) பற்றி அவர்களும் சொல்கிருர்கள். இந்தக் கேள்விகளும் இருக்கின்றன.

இலக்கியப் பிரக்ஞையுடன் வரும் எழுத்துக்களை ஓரளவு படித்து வருகிறேன். புதுமை செய்கிருர்கள்; ஆனால் பிராய்டிஸத்தை அப்ஸெட்ஸைன்ஸாகச் செய்யும் விந்தை விந்தையூட்டுகிறது, இதே வேகத்தில் பழந்தமிழும் அறிந்த ஒருவர் கண்ணகியைக் கற்பின் யந்திரமெனக்கூறி அபூர்வமான ஆராய்ச்சி செய்துவிட்டார். ஒரு நாவலில் கிராமியமான வசவு முழு உருவத்துடன் புகுகின்றது.

பச்சை பச்சையாய் ஒரு பெண் நினைப்பதாக வருகிறது.

நல்லவேளை அவளே சொல்வதாக வரவில்லை. இதுதான் புதுமை. அழகுணர்ச்சியென்ற இலக்கிய வித்து இல்லாமல், இந்திய சமூக எல்லைக்குப் பொருந்தாத மனக்கிளர்ச்சிகளை வக்கணை கூறி வியக்குகிறது எழுத்து. எனக்குச் சில இடங்கள் புரியவே இல்லை. பாமரப்பட்டம் வருமென்று தெரிந்தே சொல்கிறேன். ஒன்றுமே புரியாமல், பாராக்களைப் பக்கங்களைப் படித்து பிரமிக்கவேண்டியிருக்கிறது. பெண் விடுதலை, பெண்களுக்கு பரிந்துபேசும் நியாய புத்திபோன்ற புதுயுகப் பிரச்னை இடம் பெறுகிறது; ஆனால் செயற்கையாகவும், போலித்தனமான புது நாகரிகமாகவும் பரவிவரும் கடிவாளமில்லாக் குதிரைகளை வைத்துக் கக்ஷி ஆடுகிறார்கள். ஹிப்பித் தன்மைகூடத் தலைகாட்ட முற்படுகிறது, சிவப்பு நிறம்பூசாத ஒரு அநுதாபப் பேச்சு ஏழை எளிய வர்க்கத்தைக்கண்டு இரங்கும் அநுதாபப் பேச்சு வருகிறது. பேசுகிறவர்கள் உயர்தர மத்திய வகுப்பினர். வசதியுள்ளவர்கள்; மேலும் வசதி வாய்க்கக்கூடிய நிலையில் இருப்பவர்கள்; ஆகவே சுதந்திர இந்தியாவின் இருபத்தைந்தாண்டு சோஷலிசப்பாணியின் சாயல் நன்கு விழுகிறது. பத்திரிகைகளைத் தவிர ஆர்வமுள்ள பலர் இலக்கியப் பிரக்ஞை வளரப் பல கூட்டங்களாகக் குழுக்களாகக் கூடியும் செயல்படும் வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. இலக்கிய சிந்தனை, வாசகர் வட்டம்போலச் சில. ஆக மொத்தம் தமிழில் நல்ல புதிய படைப்பிலக்கியம் தோன்றும் காலகட்டம் உருவாகியிருக்கிறது. மிகவும் மகிழ்ச்சி கொள்ளவேண்டிய செய்தி இது.

முப்பது வருஷங்களுக்கு முன்பிலிருந்து திருச்சியில் புதுக்கவிதை வளர்ந்து வந்திருக்கிறது, உலக இலககிய அந்தஸ்து பெறத்தக்க கவிதைகள் பிறந்திருக்கின்றன. வசன கவிதை - புதுக்கவிதை - இலக்கண வரம்பை விரும்பாத கவிதைகூட பரிசோதனைக்குட் படுத்தப்பட்ட அநுபவங்கள் உண்டு இப்போது ஞானரதம், கணையாழி, தீபம் போன்ற பத்திரிகைகளில் புதிய கவிதைகள் நிறைய இடம பெறுகின்றன. மிகவும் அருமையான - சுவையுள்ள - துணிச்சலான முயற்சிகள். நல்ல இன்பம் தருகின்றன. இலக்கியப் பிரக்ஞையின் நல்ல வடிவங்கள் இவை; ஆனால், கவிதைக்குரிய மிடுக்கைப் பெறாத உரைநடைப் பிழைகளும் கலந்து விடுகின்றன. இங்கிலீஷ் புதுக் கவிதையின் வியவஹாரமாகவும் இது இருக்கலாம். நான் இங்கிலீஷ் படிக்காதவன்.

இலக்கியப் பிரக்ஞை மீதூர்ந்த சிலர் சிறிய குழுவினராகச் சேர்ந்து கையெழுத்து இதழ்கள் தயாரிப்பது உண்டு. அச்சிலேயே அப்படிச்செய்து, உரிய இடங்களில் உரிய பெருமையும் புகழும் பெற்ற சில பத்திரிகைகளைப் பார்க்கிறேன். "கசடதபற" என்பதொன்று. "அஃக்" என்பது மற்றொன்று. மிக உயர்ந்த சிறு கதைகளும் இலக்கியத்தரமுள்ள பிறவும் ஆக்கும் வல்லமை பெற்றோர் பலர் சேர்ந்த முயற்சிகள் இவை.

முற்றிலும் கவிதையாகவே பாடி உள்ளம் தொடும்வகையில் புதுமைக்குரல் கொடுக்கும் "வானம்பாடி" இதழ்கள் இரண்டு கிடைத்தன; அபூர்வம் - அருமை - அப்படியே நெஞ்சை அள்ளும் தமிழ்.

இதே வேகத்தில் இலக்கியப் பிரக்ஞை வளர்ந்து வளம்பெற்று, உண்மையான இலக்கியங்களைப் படைக்கப் போகின்றது. பார்த்துப் படித்து மகிழத்தான் இருக்கிறோம். தூய்மையான இலக்கியம் எது என்று வருங் காலம் தீர்ப்பு அளிக்கப்போகிறது. ஆயினும நிகழ்காலத்தில் எழுதப்படும் யாவையுமே இலக்கியமாகத்தான் இருக்கவேண்டுமென்ற நிர்ப்பந்தம் இல்லை என்ற நிலையில் எல்லோரும் எல்லா இடத்திலும் எழுதும் நிலை ஏற்படவேண்டும். தமிழ்நாட்டில் பலரும் விரும்பிப் படிக்கும் பத்தரிகைகள் இன்னும் சில வேண்டும்; இருக்கும் பெரிய பத்திரிகைகள், அதாவது எழுதுகிறவர்களுக்குக் கணிசமாகப் பணம் கொடுக்கும் பத்திரிகைகள் இன்னும் அதிகமான கதைகள் வெளியிடவேண்டும், வாசகர்களின் சுவையறிந்து கொடுக்கும் முயற்சியுடன், கதையின் சுவையறிந்து

கொடுக்கும் ஆசிரியர்களின் தொண்டால் வாசகர்களின் சுவையையும் புதிய முறையில் உருவாக்க வேண்டும் இவ்வளவுக்கும் பிறகு இலக்கியப் பிரக்ஞை, தமிழ் மொழியின் தமிழ் நாட்டின், தமிழ்ப்பண்பாட்டின் (இந்தியப் பண்பாட்டின் ஒரு கூறுகத்தான்) இந்தியப் பண்பாட்டின் நினைவுடன் வெளிப்பட்டு உருப்பெற வேண்டும். என்னதான் பிராய்டைப் படித்தாலும் புரிந்துகொண்டாலும் பிராய்ட் நமக்கெல்லாம் ஆசார்யன் ஆகிவிட முடியாது.

நம்முடை வால்மீகியும், வியாஸரும், காளிதாஸனும், பவபூதியும், இளங்கோவும், கம்பனும், சேக்கிழாரும் போன்றவர்களெல்லாம் இருக்கிறார்கள், நாம் ஹிப்பிகள் ஆவது அறியாமையாலும் போலிநாகரிகத்தாலும் நம்மை நாமே மறந்தால்தான் 'ரியலிஸம்' நமது போலித்தனத்தைக் காட்டவே பயன்படுத்தப்பட வேண்டும். ஒன்று மட்டும் சொல்லி முடித்துவிடுகிறேன். காமத்தையும், பணம் காசையும் வாழ்க்கையின் குறிக்கோள்களாகக் கொண்டுவிட்ட இந்திய வாழ்வில், தர்மம் - மறைந்தொழிந்துவிட்ட தருமம் மீண்டும் தலைதூக்கினாலன்றி, மறுமலர்ச்சி தோன்றப்போவதில்லை; ஆகவே நமது இலக்கியப் பிரக்ஞை தர்மத்தைப் புரிந்துகொண்ட பிரக்ஞையாக வளரவேண்டும். ஸத்யதர்சனம்தான் அதற்கானவழி. ஸத்யம் துலங்கட்டும். நமது கண்கள் அதைக் காணட்டும்.

---

# SEASONS BY FRUITS

— T. R. Kuppuswami

Summer, winter, autumn and spring are the four seasons acceptable to geographists. Indian seasons are just three, - summer, rain and winter. Speaking of the facetiously, a friend of mine remarked that they should be recast as hot, hotter and hottest. As for myself the seasons are numerous. Neither the lunar nor the solar months have much meaning to me. I feel the passing of time by the entrance and exit of fruits.

The famous custard apple, favourite with Warren Hastings hangs over in January. In size and sweetness the Hyderabad custard apples are a class by themselves. The Mahboobnagar fruits are much in demand during its season. Rich and poor, old and young buy these fruits and enjoy themselves with unabated avididity. A Non-Hydrabadis however may draw a long face when this fruit is mentioned to him. What does he know about these wonderful fruits? They have to be tasted to be believed. Noticing paper covered fruits on the top shelf in a fruit shop in Chandni chowk, Old Delhi, I enquired of the fruiterer what it was. He assumed a look of importance and replied that they were Hyderabad Custard Apples. 'A veritable delicacy They have been rightly given the pride of place im my shop'. 'I see, I know what it is. I am a Hyderabadi'.

The next fruit to arrive is the Anabshahi, the latest claiment to a secure place in the patronage of Hydrabadis. A little sour and a bit expensive to start with, it sells cheap and eats sweet as summer advances. Hand carts vans and lorries convey the ampuleshaped fruits. Bus stands and railway platforms are taken up by thousands of baskets of this, juicy fruit awaiting to be cleared. Aeroplanes also do their little bit in conveying the Hyderabad good cheer to all corners of India The seedless grape and the elongated violet.

variety suit the purse of the very well-to-do. A mouthful of these satiates even the glut with its unsurpassed sweetness. A delectable fragrance accompanies the flow of the liberated juice over the tongue and the oesophagus.

The first half of May witnesses the last of these grapes but even while its appearance is waning, mangoes make their appearance Sour mangoes for pickles occupy the field for sometime. Mulgoa and baynishan come next. A dribbling and then a downpour. Hillocks of these and many of their sisters take up all the space in the wholesale market. By the end of June they cease, the last arrival being Neelam.

Water melons, green and yellow, vie with one another side by side with grape and magoes. Sherbet with milk is made of them and parties are thrown out to slake the summer thirst. Hospitality is then at its best.

Orange, local or from Aurangabad or Nagpur. is another summer visitor. The fruiterers clean them hard with a piece of cloth adding thereby to their glossiness. The Afghan dry pomegranate is liked much for its exquisite red contents. The pineapples are in plenty and make a festoon at the entrance of every fruit shop. The leechi from Kashmir, the apples from Kulu clamour for their recognition at dining tables. **Bear and jamoon, 2 and the icy palmyra fruit the children's favourite, sell in every lane. Peach and plum from Kodaikanal Hills occupy shelves of their own and sell cheap.**

What is potato to a vegetable market that is mosambi (citrus) to fruitshops. In season it is large and juicy and cheap, while out of season it is reduced in size though advanced in price.

The sugar cane has of late elbowed out its way to the front. The crushing machine on wheels are seen at every street corner with a cluster of customers. A busy trade is plied as the sun gets warmer.

The Middle East dates, red and black are a 'must' during Ramzan. The black variety in paper packets is a 'Black Beauty' indeed!

The banana, spotted and sweet, adorn the shops much earlier and much later than Sankaranthi. Wood apples usher in Ganesha Chathurdasi and mark the beginning of the custard apple.

So the fruit cycle goes. Cosmopolitan in views and catholic in taste, all fruits are dear to me. They have been my contant companions and dear that they have entered my soul. My associations with events, arrivals and departures are made not by months or days but by one fruit or the other. "Yes, Mr.-was with us when the apple crate was opened. Sow-was-married away when there was a heap of golden benisha in that corner."

But Man is a disgruntled creature ever. In the midst of plenty he hungers for the jack fruiti !

---

**தேவதரிசனம் : அது**

''அசையாதது; ஒன்று; மனதைக்காட்டிலும் வேகமானது; புலன்களைக் கடந்தது; எட்டித் தொடமுயன்றால் அது எட்டி-எட்டிப்போகும்; நிலையானது'' என்பது ஈசாவாச்யம்.

தன்னிலேதான் திளைத்திருப்பதால் அது அசையாதது.

பேதமற்ற போதமானதால் அது ஒன்று.

கருத ஒண்ணாததாக இருப்பதால் அது மனதைக் காட்டிலும் வேகமானது.

குணம், குறி அற்றதால் புலன்களைக் கடந்தது.

எட்டநின்று ஏய்த்திடும் தொடுவானத்திற்கும் ஆதாரமானதால் எட்டிப்பிடிக்கமுடியாது.

பரம ஸத்யமானதால் நிலையானது.

# விவசாயப் பண்டத்துக்கு விலைவைப்பது யார்?

— கோவை அ அய்யாமுத்து

சென்னையிலே உள்ள பத்திரிகையாளர் சிலர் தங்களைச் சர்வஞ்ஞர் என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் எல்லாம் அறிந்தவர்கள்! அவர்கள் அறியாதது ஒன்றுமே இல்லை; சமீபத்தில் விவசாயிகள் கிளர்ச்சி முடிந்ததும் ஒரு குட்டிப் பத்திரிகை கீழ்க்கண்டபடி பிதற்றியது.

... பொது மக்களுக்கு விவசாயப் பெருங் குடி மக்களிடத்து அனுதாபம் கொஞ்சமேனும் கிடையாது. ஏனெனில் பொதுமக்களை விவசாயிகள் கொள்ளை அடிக்கிறார்கள் ... ஒரு கிலோ தக்காளி மூன்று ரூபாய்! ஒருபடி பச்சரிசி நான்கு ரூபாய்! இப்படிக் கொள்ளையடிப்போரிடம் எப்படி அனுதாபம் ஏற்படும்? மின்சாரத்துக்கு பத்துக் காசென்ன, பன்னிரண்டு காசுகள் கொடுத்தாலும் அவர்கள் குடிமுழுகியாபோகும்...?

தக்காளி விளைவித்த விவசாயி அதனைத் தன் தலையில் தூக்கிச்சென்று கொத்தவால் சாவடியில் விற்பதாக இந்த பத்திராதிபர் எண்ணிவிட்டார் போலும்!

அதேமாதிரி நெல்விளைவிக்கும் விவசாயி அதனைக் குத்திப் புடைத்துத்தன் தலையில் சுமந்துகொண்டுபோய் விற்பதாக எண்ணம்.

நிலத்தில் விளையும் ஒவ்வொரு பண்டமும் மார்க்கெட்டுக்குப் போகும்முன் எத்தனை கைகள் மாறுகின்றன என்று இந்த அப்பாவி பத்திரிகையாளருக்குத் தெரியாது.

ஒரு மொத்த வியாபாரி விவசாயி இடம் நெல் வாங்கவருகிறான். என்ன விலைக்குநெல் கொடுப்பாய் என்று அவன் கேட்பதில்லை. நெல் இன்ன விலைக்குக்கொடுப்பாயா என்று தான் கேட்கிறான். நெல்லுக்கும் இதர விவசாயப்பொருட்கள் யாவற்றிற்கும் மார்க்கெட் விலையை நிர்ணயிப்பவன் வியாபாரி. விவசாயி அல்ல

பிள்ளை பெற்றவன் விவசாயி. அதற்குப் பெயர் வைப்பவன் வியாபாரி! வியாபாரி கேட்ட விலைக்கு விவசாயி நெல்லை அளந்து விடுகிறான். அவனுக்கு வேறு வழியில்லை. அக்கம் பக்கம் என்ன விலைக்கு விற்றார்கள் என்பதுதான் அவனுடைய அளவுகோல். அவனுக்கு வேறு போக்கிடம் கிடையாது.

நெல்லை வைத்துப் பார்ப்போம் விலை கூடும்போது விற்போம் என்று அவனால் சிந்திக்க முடியாது. நெல் விற்றுப்பணம் கொடுப்பதாக பலபேரிடம் கடன் வாங்கியிருப்பான்.

மாடு வாங்க வேண்டும், பெண்ணுக்கு சீர்செய்யவேண்டும், பெண்டு பிள்ளைகளுக்குந் துணிமணிகள் வாங்க வேண்டும், இம்மாதிரி எத்தனையோ செலவினங்கள், பிடுங்கல்கள் அவனைச் சூழ்ந்திருக்கும்.

நெல் விற்பதை அவனால் ஒத்திப்போட முடியாது.

இருப்பு வைத்திருந்தால் விலை ஏறும் என்பது என்ன நிச்சயம்? இறங்கினாலும் இறங்கிவிடும். அந்தச் சூதாட்டத்திற்கு அவன் தயாராக இல்லை.

எனவே மொத்த வியாபாரி நெல்லை வாங்குவான். மில்லில் கொண்டுபோய் அரிசியாக அரைப்பான்.

இலாபம் சேர்த்து சில்லரை வியாபாரி கட்குக் கொடுப்பான்.

அவன் அதன் மீது இலாபம் சேர்த்து விற்பான்.

எனவே விவசாயி நெல் விற்றவிலைக்கும், கொத்தவால் சாவடியில் அரிசி விற்கும் விலைக்கும் சம்மந்தா சம்மந்தம் கிடையாது என்பது அந்த சென்னைப் பத்திராதிபனுக்குத் தெரியாது.

தக்காளியும், இதர காய்கறி, கறிவேப் பலையும் அப்படித்தான்.

கூடைகூடையாய் காய்கறிகள் சுமந்து விற்கும் பெண்கள் தோட்டம் தோட்டமாய்ப் போவார்கள். கூடை இன்ன விலையென்று நிர்ணயித்து வாங்குவார்கள். கைவண்டி களில் ஏற்றி கொத்தவால் சாவடிக்குக் கொண்டு போவார்கள். அவர்களே கடை வைத்துக் கிலோ கணக்கில் மார்க்கெட் நில வரப்படி விற்பார்கள்.

அவர்கள் வாங்கிய விலைக்கும் விற்கும் விலைக்கும் ஏணி வைத்தால் எட்டாது!

### மார்க்சிஸ்டுகள் கிளர்ச்சி

விவசாயிகள் நடத்திய பேரராட்டத்தின் போது மார்க்சிஸ்டுகள் உள்ளே நுழைந் தார்கள். எனக்கு அப்போதே தெரியும். இது கொள்ளிக்கட்டையால் தலையைச் சொறிந்துகொண்ட கதையாய் ஆகும் என்று!

விவசாயக் கூலிகளுக்குத் தினம் ஐந்து ரூபாய் கூலி தரவேண்டுமென்று மார்க்சிஸ்ட் டுகள் இப்போது கிளர்ச்சி தொடங்கியிருக் கிறார்கள்.

கொல்லர், தச்சர், கல்லுடைப்பவர்கள், கட்டிட வேலைக்காரர்கள் முதலானோர் தினம் ஆறு ரூபாய் கூலி பெறுகிறார்கள்.

மில்களிலும், இதர தொழிற்சாலைகளிலும் வேலை செய்யும் தொழில் திறமையற்ற தொழிலாளர்கள் மாதம் இருநூறு ரூபாய் வரை சம்பளம் பெறுகின்றார்கள்.

அரசாங்கத்தில் சேவை புரியும் கடை நிலை ஊழியர்கள் மாதம் நூற்றைம்பது ரூபாய் சம்பளம் பெறுகின்றார்கள்.

ரெயில்வே போர்ட்டர்கள் சிறிது நேரத் தில் சுளையாக ஒரு ரூபாய் கறந்து விடுகி றார்கள்.

அப்படியிருக்கையில் விவசாயக் கூலி கட்குத் தினம் ஐந்து ரூபாய் கேடபது அதிக மென்று எனக்குத் தோன்றவில்லை.

ஆனால் கொடுப்பது எப்படி!

ஒவ்வொரு பயிருக்கும் ஏற்படும் 'முட்டு வழிச் செலவையும், அறுவடையான மொத்த மகசூலையும் கணக்கிட்டு விலை நிர்ணயம் செய்து, அவ்விலைக்கு விற்க முடிந்தால், தாராளமாக ஆள் ஒன்றுக்கு நாளொன்றுக்கு ஐந்தென்ன, பத்துரூபாய் வேண்டுமானாலும் கொடுக்கலாம்.

அவவாறு அசலும் ஆதாயமும், விற்பனை விலையும் நிர்ணயித்து விற்கும் திறமை விவ சாயிகளுக்கு இல்லையே!

கோயமுத்தூர் பாக்டரிகளில் மோட் டார் பம்ப் செட்டுகள் தயாரிக்கப்படுகின் றன. செட் ஒன்றுக்கு ஆயிரத்தைந்நூறு ரூபாய் என்று விலை நிர்ணயம் செய்து விற்கப் படுகின்றன.

பாக்டரிகளுக்கு சென்று எவனும் அந்த விலைக்கு வாங்க முடியும். வெளியூர்களில் அந்தக் கம்பெனியின் அனுமதிபெற்ற ஏஜண் டுகளிடம் இருந்தும் நிர்ணயிக்கப்பட்ட விலைக்கு வாங்கமுடியும்.

ஆனால் விவசாயப் பண்டங்களின் விலை அவ்வாறில்லையே! தோட்டத்தில் ஒருரூபாய்! தொலை தூரத்தில் போய் இரண்டாகி விடுகிறதே!

கத்தரிக்காயிலிருந்து கரும்பு வரை எல்லா மகசூலும் இடைத்தரகர்கள் நிர்ணயிக் கும் விலைக்கன்றோ விவசாயி கொடுக்கிறான்?

தென்னந் தோப்பிலே தேங்காயொன்று முப்பது காசுக்கு வாங்கிப் போகிறான் வியா பாரி. அது கடைத்தெருவிலே அறுபது காசுக்கு விற்கப்படுகின்றது.

ஒரு தாறு - காய்கள் கொண்ட வாழைப் பழத்தை மூன்று ரூபாய்க்கு வாங்கிப் போகி றான் வியாபாரி. அது கடைத்தெருவில் பழமொன்று பத்துக்காசுக்கும் பனிரெண்டு காசுக்கும் விற்கப்படுகிறது.

பத்துக்கிலோ பிடிக்கும் தக்காளிப் பழம் கூடையொன்று மூன்று ரூபாய்க்கு வாங்கிச் செல்கிறான் வியாபாரி. அது கிலோ என்ன விலைக்கு விற்கப்படுகிறதென்று பலரும் அறி வார்கள்.

### விவசாயம் ஒரு சூதாட்டம்

விலைகள் ஏறுவதும் இறங்குவதும் விவசாயிகளின் கையில் இல்லை.

ஒரு வருஷம் ஐந்து மணு எடையுள்ள சின்ன வெங்காயம் ஐம்பது ரூபாய்க்குப் போகும். அடுத்த வருஷம் அது பத்து ரூபாய்க்கும் சீந்துவாரற்று அழுகி நாறிக் கொண்டு களத்தில் கிடக்கும்.

ஒரு வருஷம் நிலக்கடலை மூட்டை நாற்பதுக்குப் போகும்.

மற்றொரு வருஷம் ரூபாய் இருபதுக்கும் கேட்பாரற்றுக் கிடக்கும்.

விளைவதும் அப்படித்தான். மழை மாரி ஒத்துப்பெய்தால் ஏக்கருக்கு இருபது மூட்டை விளையும்.

மழை பொய்த்தாலோ ஏகருக்கு ஐந்து மூட்டை தான் கிடைக்கும், அல்லது அதுவும் கிடைக்காமல் போய் விடும்.

இவ்வருடம் ஆரம்பத்தில் எம். சி. யு. ஐந்தாம் நெம்பர் பருத்தி குவிண்டால் 325 ரூபாய்க்கு வியாபாரிகள் அள்ளிக்கொண்டு போனார்கள். பருத்தியின் தரத்தைப்பற்றி அவர்கள் கவலைப்படவில்லை.

அதே பருத்தி ஆறுமாதங்கள் கழித்து குவிண்டால் 200 ரூபாய்க்கு கேட்பாரற்றுக் கிடந்தது.

பச்சை மிளகாய் 100 ராத்தல் கொண்ட மூட்டை அறுபது ரூபாய்க்கும் விற்கும். பத்துரூபாய்க்கும் கேட்பாரற்றுக் கிடக்கும்.

மகசூல் விளைச்சல் குறையும். விலைகள் தாறுமாறாய் ஏறும் இறங்கும். விவசாயக் கூலியும் நிர்ணயமற்று அறுவடைக் காலங்களில் விஷம் போல் ஏறும்.

வானம் பொய்த்தலும் விஷப் பூச்சிகள் மொய்த்தலும் சர்வ சாதாரணம்.

இதையெல்லாம் யார் எண்ணிப் பார்க்கிறார்கள்.

கொட்டும் மழையில், கொளுத்தும் வெய்யிலில் கூதல் காற்றில், இரவில் பகலில், எந்த நேரமும் விவசாயி தன் நிலத்தில் கொட்டிலும், ஆம்பலும், நெய்தலும் போல மனம் நொந்து கிடக்கிறான். உளம வெந்து கிடக்கிறான்.

தன் உயிர் போவதாயினும் அவன் தன் நிலத்தை விட்டுப் பெயரமாட்டான். வேறு தொழில் எதுவும் அவன் செய்தறியான்.

பசுமை கண்டபோது மனம் குளிர்ச்சி அடைகிறான். வறட்சிகண்ட போது மனம் வெம்புகின்றான்.

தான் பட்டினி கிடப்பினும் பிறர்பசியைப் போக்க விழைகின்றான்.

தனது ஆடு மாடுகள் வயிறு நிறைய உண்ட பின்னரே தான் உண்கின்றான்.

### என்ன செய்யவேண்டும்

விவசாயி விளைவிக்கும் பொருட்களுக்கு நியாயமான விலை நிர்ணயம் செய்யப்பட வேண்டும்.

அப்பொருட்கள் அவ்வப்போது அரசினரால் கொள்முதல் செய்யப்படவேண்டும்.

விலை ஏற்றம், இறக்கம் ஆகிய அபாயங்களின்றி விவசாயி காப்பாற்றப்பட வேண்டும்.

என்றும் ஒரே சீரான விலை கிடைத்தால், அவனும் தன் உதவியாட்களுக்குச் சீரான கைம்மாறு செய்யப் பின் வாங்கமாட்டான்.

திட்டக் கமிஷன் அதிகாரிகளே சிந்தியுங்கள். சட்டசபை அங்கத்தினர்களே உங்கள் சிந்தனையைச் சற்றே இதில் செலுத்துங்கள். பொதுமக்களே விவசாயிகளிடம் அனுதாபம் காட்டுங்கள்.

—ஜெய் கிசான்! ●

---

தேவதரிசனம் :

### மனஸ்தாபம்

மனஸ்தாபமே அனுதாபம். அதாவது மனதின் தாபமே அனுதாபம். அந்த அனுதாபம் என்ற நீண்ட கைகொண்டு உலகத்தை அணைத்துக்கொள்.

# தலைநகரில் தாமிரப்பத்திர வீரர்கள்

‘குலாபிபாக்’ முகாமில் மூன்றுநாட்கள் தாமிரப்பத்திர விருதுச் சான்றோர்களுடன் தங்கியிருந்த அனுபவத்தில் தகவல் தருபவர் :

ஏ. ஆர். ராஜாமணி

## சில சுவையான ரசத்துளிகள் !

1. மூன்றுபட்டியல்களின்படி மொத்தம் 83 தியாகிகள் விருதுபெற்றனர்.

2. கடைசி நிமிஷத்தில் ‘தேர்ந்தெடுக் கப்பட்டு’ தலைநகர் வந்து சேர்ந்தவர் கோவை. அய்யாமுத்து அவர்கள். 75 வய தாகியும், என்னகணீரென்ற குரல் அவருக்கு!

3. ஆர்வத்துடன் ‘அவர்’ பெயரைக் கேட்டு அலைந்துகொண்டிருந்த எனக்கும். சாலைதம்பதியருக்கும், அந்த முகாமில், தமிழகப்பிரதிநிதிகள் உட்பட எவருமே சரியாகப் பதில் சொல்லவில்லை! இத்தனைக் கும் அந்த முகாமில் மூன்று நாட்கள் முடங் கிக் கிடந்தவன் நான்!

4. தமிழகக் குழுவின் தலைவராக ‘மாநில’ அரசினரால் அங்கீகரிக்கப்பட்டவர் திரு. எல். கிருஷ்ணசாமிபாரதி. ஆனால், தமிழக சுதந்திரப் போராட்ட வீரர்களின் பொது அமைப்பிற்குத் தலைவர் திரு. எஸ். என். சோமயாஜுலு! இதிலேயும் இரண்டு கட்சி!

5. நாடெங்கிலுமிருந்து 1110 தியாகி கள் தலைநகரில் தாமிரப்பத்திர விருதுகள் பெற்றனர். பகத்சிங்கின் அன்னையும் இவர் களில் ஒருவர்.

6. காலவசதிக் குறைவினால், பிரதமரிட மிருந்து நேரடியாக ‘தாமிரப் பத்திர’ விருது களைப் பெற்றுக்கொண்டவர்கள் மொத்தம் ஏழுபேர். இவர்களில் திரு. கிருஷ்ணசாமி, பாரதியும் அடங்கும்.

‘‘குலாபிபாக்’’ என்கிற பகுதியில் புதிதாகக் கட்டப்பட்டுள்ள ‘தில்லிமாநில’ அரசினரின் மலிவு வீடுகளில் அனைத்து மாநில தியாகிகளுக்கும் உணவு, உறைவிட வசதிகள் ஏற்பாடாகியிருந்தது. இந்தப் பொறுப்பை, தில்லி மாநில அரசின் தலையில் கட்டிவிட்டு, தப்பித்துக்கொண்டுவிட்டது மத்ய அரசு நிர்வாகம்!

7. இதன்மூலம், புகார்கள் வந்தால் ‘‘விசாரணை, மேற்கொள்ளுகிறோம்’’ என்று மழுப்பி, நழுவிவிட முடியும் அல்லவா! நல்ல சாகஸக்காரர் இந்த பிரதமர் என்று முணு முணுத்த தியாகிகள் அநேகர்!

8. ஆயினும் ஏற்பாடுகள் படுபிரமாதம்! என்றாலும். ‘தியாகிகள்’ நடத்தப்பட்டவிதம் சரியில்லை என்கிற எதிர்க்கட்சி அரசியல் வாதிகளுக்கே உரியக் குற்றச்சாட்டைவீசி, நாடாளுமன்றத்தை நாறவைத்தார் திரு. குஹா என்கிற உறுப்பினர்;

9. நாளொன்றுக்கு ‘தியாகிகள் பரா மரிப்பு’ச் செலவிற்கான தொகை 65ஆயிரம்!

10. தமிழக அரசு, தனது பிரதிநிதியாக திரு. டி. டி. சுந்தர்ராஜ் என்கிற ஐ. ஏ. எஸ். அதிகாரி ஒருவரை அனுப்பிவைத்து, தமிழகக் குழுவின் நலனைக் கவனித்துக் கொள்ளச் செய்திருந்தது ‘கலைஞரின்’ பெருமையையும், நிர்வாக நெறியையும் பிற’ மாநிலத்திலிருந்து வந்திருந்த ‘‘முதிர்ந்த அரசியல்’’ தியாகி களைப் பெரிதும் கவரச்செய்துவிட்டது!

11 திரு டி. டி சுந்தர்ராஜ், தமிழகக் குழுவினரது கவனத்தை ஈர்க்கும் வகையில் பொறுப்பாகச் செயல்பட்டதோடு, சென்னை யில் கவர்னர் ஷா, அவர்களுக்கு அளிக்க

விருந்த நேநீர் விருந்திற்கான அழைப்பிதழ் களையும். தியாகிகள் வந்து சேர்ந்தவுட னேயே கொடுத்துச் சென்றார்!

12. நிகழ்ச்சி நிரலில் அறிவிக்கப்படாம லிருந்த ஒரு அம்சம் பிரதமர் காந்தியின் இல்லத்தில் தாமிரப்பத்திர வீரர்களுக்கு தேநீர் விருந்து. இறுதியில் 'இந்த நிகழ்ச்சி, ''தின்மூர்த்தியை''த் தியாக வீரர்கள் கண்டு களிப்பதற்கு வசதியாக, நேருஜி வாழ்ந்த இல்லத்திலேயே வைத்துக்கொள்ளப்பட் டது. அங்கு பிரதமர் காந்தி, நாட்டின் பழம் பெரும் போராட்ட வீரர்களுடன் மனம் விட்டு அளாவினார்! இதற்கு திரு. ராமரத்னம் போகவில்லை. என்ன, ''ஸ்வாமிதரிசன மாயிற்று?'' என்று பிரதமரைச் சந்தித்துத் திரும்பியவர்களை அவர் ''நையாண்டி'' செய்துகொண்டிருந்தார்!

13. தமிழகக் குழுவின் தலைவரான திரு கிருஷ்ணசாமி பாரதி அவர்களிடம் 'சிக்க லான' ஒரு கேள்வி பத்திரிகை நிருபர்களி னால் கேட்கப்பட்டது. ''சிறந்த தேசபக்த குடும்பத்தைச் சேர்ந்த திரு. லக்ஷ்மிகாந்தன் பாரதியை, பிரிவினைவாதம் பேசும் கட்சி யைச் சார்ந்த முதலமைச்சரின் தனிசெயல ராகப் பொறுப்பேற்றதை, நீங்கள் அவ ருடைய தந்தை என்கிற முறையில் தடுத் திருக்க முடியும் அல்லவா ?''

இதற்கு திரு. கிருஷ்ணசாமி பாரதி அவர் அளித்த பதில் ஆணித்தரமாக இருந்தது. ''சிறந்த தேசபக்த குடும்பத்தைச் சார்ந்த ஒருவரை, கட்சிக் கொள்கைகளுக்கு அப் பால் நின்று-பரந்த கண்ணோட்டத்துடன், சிறிதும் அசூயையோ அச்சமோ இல்லாமல் தன்னுடையத் தனிச் செயலராக நியமித்துக் கொண்ட, தமிழக முதல்வர் கருணாநிதி அவர்களின் செயலைப் பாராட்டுவதே பண்பு! மாறாக, ''காமாலைக்கண்ணோட்டத்தோடு'' இப்படியொரு கேள்வி எழும்புவது, இன்ன மும் நாம் அரசியல் உணர்வில் சிறந்த முதிர்ச்சியை அடையவில்லை என்பதையேப் புலப்படுத்துகிறது!

கேள்விகேட்ட நிருபர் நிலைகுலைந்து போனார் என்று சொல்லவும் வேண்டுமா!

14. தாமிரப்பத்திர விருதிற்காக அர சினரால் அழைக்கப்பட்டவர்கள் தவிர, தமிழகத்திலிருந்து தானாகவே வந்த சில தியாகிகளும் உண்டு!

15. காலஞ்சென்ற தேசபக்தர் திரு வண்ணாமலை திரு. அண்ணாமலைப்பிள்ளை அவர்களின் பேத்தியான லட்சுகாந்தம்மா உள்ளிட்டபலர், இந்த அணியில் சேர்ந்து கொண்டு, தாமிரபத்திரவிருதை எங்களுக்கு மட்டும் ஏன் வழங்கவில்லை என்கிற சமரில் இறங்கினார்கள்!'' உங்களுக்கும் வழங்கப் படும்—ஆனால் இப்போது அல்ல!'' என்று அவர்களிடம் சொல்லப்பட்டது !

16. தென்னாற்காடு மாவட்டம், கடலூ ரிலிருந்து வந்திருந்த 'சுதர்சனம்' என்கிற பெரியவர் உண்மையிலேயே காந்தியத் தத்துவத்தின் எளிய கோலத்தோடு விளங்கி னார்! தாமிரப் பத்திர விருதுக்காரரான அவர், இதற்கான தன்னுடையப் பெயர் பொறித்த அடையாளக்கார்டைக்கூட, மடியில் வைத் துக் கட்டிக்கொண்டிருந்தார்! காரணம், அவர் இடுப்புவேஷ்டியும், மேல் துண்டும் தவிர எதுவுமே உடைமை இல்லாத அசல் தியாகி!

17. மற்றவர்களைப் பார்க்கும்போது, பொதுவாக அனைவருக்கும் தோன்றிய எண் ணம் இதுதான்: சுமக்கமுடியாதப் பெட்டி, படுக்கை, பிளாஸ்க் வசதிகளுடன் வந்திருக் கும் இவர் யார் ? உல்லாசப் பிரயாணி களா ?

18. இருபத்தைந்து வருடங்களில் இந்த தியாகிகளில் ஒரு சிலராவது செல்வம் கொழிக்கும் வியாபாரிகளாக, பர்மிட், லைசென்ஸ் ஏகபோகக்காரர்களாக, இன்னும் பலவகைகளில் உருமாறிப் போய்விட்டிருப் பதையும் காணமுடிந்தது!

19 சென்னை சென்ட்ரலில், முத லமைச்சர் மு க 'சில தியாகிகளுக்கு கதர்ச் சால்வை வழங்கி, வழியனுப்பினாராம். தின மணி ஆசிரியர்குழாமைச் சார்ந்தவரும், தாமிரப்பத்திர விருதை ஏற்பதற்காக தேர்ந் தெடுக்கப்பட்டவருமான திரு. என். ராம

ரத்னம் அவர்கள், இந்த சால்வையை குலாபிபாக்கில் 'தொலேத்துவிட்டது தெரிந்ததும், வாய்பேசாமல், 'தியாகி'யாகவே இருந்துவிட்டார்:

20. கதர்ச் சால்வை போர்த்தியும், ரயிலடிக்குச் சென்றும் தியாகிகளேக் கௌரவிக்கவும் கவர்ச்சிக்கவும் முயன்று, அதில் வெற்றியும் கண்ட முதல்வர் தலேநகரில் இவர்களது விசேஷப் பாதுகாப்பிற்காக, தனது அரசின் உயர் அதிகாரி ஒருவரையும் அனுப்பி உதவி இருந்த பண்பும், சமயோசிதமும் வெகுவாகப் பாராட்டப்பட்டன. வேறு எந்த மாநில அரசும் இவ்வாறன கடமைகளே குறிப்பாக நலேநகருக்கு தனது உயர் அதிகாரிகளே அனுப்பி தியாகிகளின் வசதிகளேக் கவனிக்கும் பொறுப்பை ஏற்றதில்லே என்பதும் இங்கு கவனிக்கத்தக்கது! தியாகிகளுக்கு மாற்றுக்கட்சி முதல்வர் மனமுவந்து, வலிய மேற்கொண்டு செயலாற்றிய தன்மையைப் பழம்பெரும் காங்கிரஸ் தலேவர்களினுலும் தொண்டர்களினுலும் பெரிதும் நினேவு கொள்ளப்பட்டது.

21. தமிழகத் தியாகிகள் அனேவருக்கும் தில்லித் தமிழ்ச் சங்கம் பிரமாதமான வரவேற்பு ஒன்றை அளித்து மகிழ்ந்தது. இந்தக் கூட்டத்தில் பேசுவதற்குத்துடித்த, ஒருசில, தியாகிகளின் மன நிலே, அவர்களின் தியாக வரலாற்றை இந்த உலகம் அறிந்துகொள்ள வேண்டும் என்கிற வேட்கையைப் புலப்படுத்துவதாக இருந்தது!

22. மொத்தத்தில், "தியாகம்" என்கிற சொல்லுக்குரிய உணர்வுகள் "விருதுபெற்றத் தியாகிகளுக்கே மரத்துப்போன காலகட்டத்தில், பாராட்டுவிழா நடத்தப்படுருக்கிறது அவர்களுக்கு, என்பதே உண்மை! என்றுலும், எல்லோருக்கும் இனிதாக தில்லிப் பட்டணத்தைக் கண்டு களித்து, அதன் பீடாதிபதிகளே அணுகிச் சல்லாபிக்க முடிந்தது ஒரு தனி அனுபவம்தானே!

---

# GANDHIGI ON HINDUISM

Hinduism is the most tolerant creed because it is non-proselytizing and it as capable of expression to-day as it has been found to be in the past.

Hinduism is not an exclusive religion. In it there is room for worship of all the prophets of the world. It is not a missionary religion in the ordinary sense of the term.

Hinduism tells everyone to workship God according to his own faith or 'dharma', and so it lives in peace with all religions.

Hinduism is a relentless pursuit after Truth and if to-day it has become moribund, inactive, irresponsive to growth, it is because we are fatigued and as soon as the fatigue is over, Hinduism will burst forth upon the world with a brilliance, perhaps, unknown before.

Hinduism is like the Ganges, pure and unsullied at its source, but taking in its course the impurities in the way. Even like the Ganges it is beneficient in its total effect.

Hinduism is not a religion. It is a way of life.

(compiled by V. G. Srinivasan, Madurai-1)

# அழிவில்லா துருவ விண்மீன்

புவியரங்கம் போற்றுகின்ற முதல்வி யானுர்;
பொல்லாத பகைஞர்க்குச் சிம்ம மானுர்;
கவியரங்கம் ஏத்துகின்ற தலைவி யானுர்;
கண்ணுன மக்களுக்கு இமைபோ லானுர்;
குவிகரங்கள் காக்கின்ற தேவி யானுர்;
இந்தியத்தின் மக்களுக்கு அன்னை யானுர்;
தவிக்கின்ற கடல்வாழ்வில் கப்பல் ஆனுர்;
தெருளாத மனத்திற்கு ஞான மானுர்!

அரம்போலும் கூரியநல் லறிவு கொண்டு
ஆளுகின்ருர் பாரதத்தின் முதன்மை கண்டு;
சிரம்கொண்டார் அறிஞரெலாம் வணங்க வென்று
செவிமடுக்கக் களிக்கிறது உள்ளம் இன்று!
வரம்கொண்டார் போலும்நம் காந்தி அன்று
வழிவழியாய்த் தனிமுதன்மை வேண்டுமென்று!
கரம்கொண்டார் ஆயிரமாய் நம்மைக் காக்க;
கனிவான இந்தியத்தின் முதல்வர் வாழ்க!

பரசிவத்தைக் காண்பதெல்லாம் மிகவும் எண்மை;
பாட்டாளி உயர்வேதான்: இதுதான் உண்மை!
முரசறைவோம் மொழியினிலே சிக்கல் இல்லை;
மூண்டுவந்த வெளிப்பகையும் இனிமேல் இல்லை!
அரசியெனும் பெயரின்றி, அன்பு பூண்டு,
அனைவரையும் காக்கின்ருர் அன்னை ஈண்டு!
அரசியலென் னும்வானில் இந்திரா இன்று,
அழியாத துருவத்தின் விண்மீன் அன்றே!

— புலவர். வி. வீரப்பன்



## அமுத வாக்கு

உண்மை யறிந்தவர் உன்னைக் கணிப்பரோ
மாயையே – மனத்
திண்மையுள் ளாரைநீ செய்வதும்
ஒன்றுண்டோ – மாயையே

# அசோகா பாக்கு




Edited Printed and Published by its owner Sri Triloka Sitaram at his Kavignar Press,
2-A Fort Station Road Trichy-2. Annual Subscription Rs. 10

# சிவாஜி



அமரத்வமடைந்த ராஜாஜிக்கு
நமது அஞ்சலிகள்

டிசம்பர் 1972